ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த

# பரமார்த்தஸ்துதி

[திருப்புட்குழி யெம்பெருமான் விஷயமானது.]

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

**எளியநடையில் தெளிய எழுதிய உரையுடன் கூடியது**

---

வெண்பா

**வேதியர்கள் வாழவரு வேதாந்த தேசிகனார்**
**நீதியொடு நின்றுரைத்த நின்மலநூல்--தீதறவே**
**செப்புமவர் கேட்குமவர் சென்னிதனிற் சேர்க்குமவர்**
**ஒப்பிலரென் றோர்த லுறும்.**

முன்னுரை :—கவிதார்க்கிகஸிம்ஹமாய் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராய் விளங்கின ஸ்வாமி தேசிகன் வேத வேதாந்த ரஹஸ்யார்த்த ஸாரங்களைத் தொகுத்து அருளிச்செய்த ஸ்தோத்ரரூப திவ்யக்ரந்தங்களில் பரமார்த்தஸ்துதி யென்னுமிந்த ஸ்தோத்ரம் பரமவிலக்ஷணமானது. ஸ்ரீகாஞ்சீ க்ஷேத்ர பரிஸரத்தில் திருப்புட்குழி யென்னும் திவ்ய தேசம் ஸுப்ரஸித்தமேயாம் அத்தலத்து எம்பெருமான் விஷய மாக அமைந்தது இந்த ஸ்தோத்ரம்.

இதில் ஸமரபுங்கவ! என்றும், ரணபுங்கவ! என்றும், ஆஹவபுங்கவ! என்றுமுள்ள ஸம்போதநங்கள் அத்தலத்து எம்பெருமானுக்குத் திருமங்கையாழ்வார் சாத்தின திருநாமத்தின் மொழிபெயர்ப்பாகும். பெரியதிருமடலில் "புட்குழியெம்போ ரேற்றை" என்பது திருமங்கையாழ்வாரருளிச்செயல். போரேறு என்னும் தமிழ்த் திருநாமமே ஸமரபுங்கவ: இத்யாதி திருநாமங்களாக வடமொழியில் விளங்கா நின்றது, போர் ஏறு—யுத்தத்தில் விருஷபம் போலச் செருக்குற்று வெற்றிபெறுமவர் என்றபடி. வடமொழித்திருநாமத்தின் பொருளும் இதுவேயாகும்.

புட்குழி = புள்—ஜடாயுவென்னும் பெரியவுடையார்; அவரைக் குழியிலிட்டு ஸம்ஸ்கரித்தவிடமென்று சொல்லுதல்பற்றிப் புட்குழியென்று இத்தலத்திற்குத் திருநாமமாயிற்றென்பர்

ஸ்வாமி தேசிகனும் இந்த ஸ்துதியில் (க்ருத்ரஸர:) என்னும் ஸ்ரீஸூக்தியினால் அந்தப்ரஸித்தியைக் காட்டி யருளினர்.

பெரியவுடையாரென்னும் ஜடாயுவுக்குப் பெருமாள் ஸம்ஸ்காரம் செய்தரு ளின அக்காலத்தில் யுத்த ப்ரஸக்தியொன்றுமில்லையாயிருக்க, போரேறு என்ற திருநாமம் நிகழ்ந்தது என்னேவென்று சிலர் சங்கிப்பர்கள்; கேண்மின்:—பெரிய வுடையாரை ஸம்ஸ்கரிக்க நேர்ந்ததற்கு, ஜநஸ்தானத்திலுள்ள பதினாலாயிரம் அரக் கர்களை ஸ்ரீராமபிரான் அஸஹாய சூரனாய்ப் பொடிபடுத்தியது மூலகாரண மென்பது ப்ரஸித்தம். "தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம், பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே." என்னும்படியாக அப்போது கொண்டிருந்த போர்க் கோலம் ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே ஊற்றிருந்ததனால் *புட்குழியெம்போரேற்றை* என்று அருளிச்செய்யலாயிற்றென்று பெரியோர் பணிப்பர். பிராட்டியைப் பிரிந்த ஆற்றாமையின் கனத்தினால சீற்றம் அறவிஞ்சி "ஜகத் ஸசைலம் பரிவர்த்தயாம்யஹம்." இத்யாதிப்படியே பெருமாள் அநபிபவநீய ராயிருந்த விருப்பைப்பற்றப் போரேறு என்றதாகவுங் கொள்ளலாம். போரேறு என்பது ஸ்ரீராகவனுக்கு இயற்கையிலே பொருந்தக் கூடிய திருநாமமேயாதலால் அதையிட்டுச் சொன்னபடியுமாம்.

இந்த ஸ்தோத்ரத்திற்குப் பரமார்த்தஸ்துதி யென்று திருநாமமானது ஏன்? யதோக்தகாரிஸ்தோத்ரம், அஷ்டபுஜாஷ்டகம், வரதராஜபஞ்சாசத் என்னுமாபோலே ஸமர புங்கவஸ்துதி என்னவமையாதோ? என்பர்; ஸ்வாமிதாமே நிகமநச்லோகத்தில் *பரமார்த்தஸ்துதிரத்ஹம் ப்ரபந்த:* என்றருளிச் செய்திருக்கையாலே இந்தத் திருநாமமே ஸ்வாமி தாம் இட்டருளினரென்பது நிர்விவாதம். இட்டதற்குத் திருவுள்ளம் யாதென்னில்; பரமார்த்த மென்றது பரம புருஷார்த்த மென்றபடி. சதுர்விதபுருஷார்த்தங்களில் பரமமான புருஷார்த்தம் மோக்ஷமேயாதலால், அதனை

யளிக்கவல்ல ஸ்துதியென்று திருவுள்ளம். காயிகமான கைங்கரியம் பண்ணின பெரியவுடையார்க்குக் கிடைத்த மோக்ஷம் இந்த ஸ்துதியின் அநுஸந்தான மாத்ரத்திலை் நம்போலியர்க்குக் கிடைக்குமென்று ஸ்துதியின் திருநாமத்திலேயே தெரிவித்தருளினாராயிற்று. பரமார்த்த ப்ரதமான ஸ்துதியைப் பரமார்த்த ஸ்துதியென்னத் தட்டில்லையிறே. சாகபார்த்திவஸமாஸம்போலே கொள்ளலாம்.

பெருமாள் 'மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாநநுத்தமான்'' என்று சொல்லிப் பெரியவுடையார்க்கு முக்தியளித்தது ''ஸத்யேந லோகாந் ஜயதி'' என்னும் படியான ஸத்யவாக்த்வப் பெருமையினால் என்று ஸம்ப்ரதாயம். அங்ஙனம் ஸத்யவாக்கான பெருமாளைப்பற்றின ஸ்துதி இதுவாதலால் பரமார்த்தஸ்துதி யென்று திருநாமமிடப்பட்டதென்றும் சிலர் சொல்லுவதுண்டு. இங்ஙனே யாம்போது பரமார்த்தவக்தாவான பெருமாளைப் பரமார்த்தமென்றதாகக்கொண்டு ஔபசாரிக வ்யபதேசமென்னவேணும். சுலோகந்தோறும் பல சிறந்த அர்த்தங்களை வெளியிடுகின்ற துதியாதலால் பரமார்த்தஸ்துதி யென்கிறது என்பாருமுளர்.

முன்னுரை முற்றிற்று.

# பரமார்த்தஸ்துதி

{ ஸ்ரீமான் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ,
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி. }

{ ஸ்ரீமத் க்ருத்ரஸரஸ்தீரபாரிஜாதமுபாஸ்மஹே,
யத்ர துங்கைரதுங்கைச்ச ப்ரணதை: க்ருஹ்யதே பலம். (1) }

—: ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் எழுதிய உரை :—

வெண்பா.

பரமார்த்தி தீரப் பரமகுரு தந்த
பரமார்த்த நற்றுதியின் பாலே—பரவாதி
பீகரனு மண்ணங்க ராசிரியன் பெய்தவுரை
ஆகரமே யாழ்பொருளுக் காம்.

(அந்வயம்.) யத்ர துங்கை: அதுங்கைச் ச ப்ரணதை: (ஸத்பி:) பலம் க்ருஹ்யதே, (தம்) ஸ்ரீமத்க்ருத்ரஸரஸ்தீரபாரிஜாதம் உபாஸ்மஹே.

(பொழிப்புரை) எந்த எம்பெருமான் பக்கலில், சிறந்தவர்களும் நீசர்களும் வணங்கினவர்களாய்க் கொண்டே பலன் பெறுகின்றவர்களாயிருக்கின்றார்களோ, அப்படிப்பட்ட திருப்புட்குழிக்கரையில் முளைத்துள்ள கற்பகத்தருவென்னலாம் படியான விஜயராகவனை இறைஞ்சுகின்றோம். ஸ்ரீவிஜயராகவனை ஸேவிக்குமவர்கள் ஜன்மவ்ருத்தங்களால் உயர்ந்தோராயினும் இழிந்தோராயினும் பலன்பெறுவது திண்ணமென்கை.

14

***—திருப்புட்குழி என்கிற திருநாமம் திவ்ய தேசத்திற்கு வழங்கிவந்தாலும் அவ்விடத்திலுள்ள புண்ய புஷ்கரிணிக்கு ஏற்பட்ட திருநாமமே இது திருவெள்ளக் குளம், பெருங்குளம் முதலிய திருநாமங்கள் அங்குள்ள தடாகங்களைப்பற்றியே உண்டாகி, அவையே திவ்யதேசத் திருநாமமாகவும் வழங்குதல்போல இங்குங் கொள்க. திருப்புட்குழியென்னப்படுகின்ற ஸ்ரீ க்ருத்ரபுஷ்கரிணியின் கரையிலே எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ விஜயராகவனைக் கல்ப வ்ருக்ஷமாக உருவகப்படுத்தியருளுகின்றார். தடாகத்தின் கரையிலே விளங்குகின்ற வ்ருக்ஷத்திற்கு (பலனளிக்குந்தன்மை) குன்றாதாதலாலும். "எற்பரனென்னையாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத்தந்த கற்பகம்" என்கிறபடியே எம்பெருமான் கல்பவ்ருக்ஷமென்னத் தகுதியுடையனாதலாலும், விசேஷித்து இத் தலத்து எம்பெருமானுடைய வரப்ரஸாத வைபவம் ஸுப்ரஸித்தமாதலாலும் ஸ்ரீமத் க்ருத்ரஸரஸ்தீர பாரிஜாதம் என்றது மிகப்பொருந்தும்.

இந்தக் கல்பவ்ருக்ஷம் மிக உயர்ந்ததேயாயினும் அர்ச்சாவதார நிலைமைக்கு ஏற்பத் தன்னைத்தாழவிட்டுக்கொண்டிருப்பதனால் இந்த வ்ருக்ஷத்தில் பலன் பெறுவதற்கு யாரும் ப்ரயாஸங்கொள்ளவேண்டிய அவசியமில்லை; தாழமாகவே பலன் கொள்ளலாமென்கிறார் உத்தரார்த்தத்தில். உயர நின்றார்க்குப் பலன் கிடைக்காது

துங்கை: அதுங்கை: ப்ரணதை: என்கிற பதங்கள் ச்லேஷமாக அமைந்துள்ளன உலகத்தில், சில மரங்களில் பலன் பெறுவதற்கு உயரமானவர்களே வல்லவராவர் சில மரங்களில் பலன் பெறுவதற்கு வாமநர்கள் வல்லவராவர். இந்த விலக்ஷண கல்ப வ்ருக்ஷத்திலோவென்னில், உந்நதர்களும் வாமநர்களும் மிகவும் தாழ்ந்தே பலன் பெற வேண்டுமென்கிறார், ஜந்ம வ்ருத்தங்களினால் மிகவுயர்ந்தவர்களாயினும், அவற்றால் மிகத் தண்ணியவர்களேயாயினும் ப்ரபத்திபண்ணின மாத்திரத்திலே இப் பெருமான் பக்கலில் பேறு பெறக் குறையில்லை என்பது பரமார்த்தம். பலன் என்றது உத்தம புருஷார்த்தமான மோக்ஷத்தைச் சொன்னதாகலாம்; அவரவர்கள் விரும்புகிற பலனை ஸாமாந்யேந சொன்னதாகவுமாகலாம். ... (1)

குருபிஸ்த்வதநந்யஸர்வபாவை: குணஸிந்தௌ க்ருதஸம்ப்லவஸ் த்வதீயே,
ரணபுங்கவ வந்திபாவமிச்சன் அஹமஸ்ம்யேகமநுக்ரஹாஸ்பதம் தே. (2)

(அந்.) ஹே ரணபுங்கவ! த்வதநந்யஸர்வபாவை: குருபி: த்வதீயே குணஸிந்தௌ க்ருதஸம்ப்லவ: (அத ஏவ) வந்திபாவம் இச்சந் அஹம் தே ஏகம் அநுக்ரஹாஸ்பதம் அஸ்மி.

புட்குழியெம்போரேறே! உன் பக்கலன்றி வேறோரிடத்திலும் நெஞ்சைச் செலுத்தாதவர்களான ஆசிரியர்களாலே உனது குணக்கடலில் அவகாஹநம் பெறுவிக்கப்பெற்று, அது அடியாகவே உன் திறத்தில் ஸ்தோதாவாக இருக்கவேணுமென்று ஆசைகொண்டிருக்குமடியேன் உனது அநுக்ரஹத்திற்கு முக்கியமான கொள்கலமாயிராநின்றேன்—என்னை அநுக்ரஹித்து ஸ்தோதா வாக்கியருளவேணுமென்கை

உன்னைச்சிந்தை செய்வது தவிர வேறொன்றுமறியாத ஆசாரியர்கள் *பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்ளுமவர்களாகையாலே என்னையும் திருத்திப் பணிகொண்டு உனது குணக்கடலிலே அவகாஹிக்குமளவில் நிறுத்தியுள்ளார்கள். இங்ஙனே அவகாஹிக்கப்பெற்றபின்பு, வாய்படைத்

தப்ரயோஜநம் பெறுமாறு உன்திறத்தில் துதிமொழியாகச் சில பேசியல்லது தரிக்க வொண்ணாதபடியாயிரா நின்றது. *தாம் தம் பெருமை யறியார்* என்றும், *தனக்கும் தன் தன்மையறிவரியான்* என்றும், *நான்மறைகள் தேடி என்றுங்காண மாட்டாச்செல்வன்* என்றுஞ் சொல்லுகிற கட்டளையிலே யிரா நின்ற வுன்னை அறிவொன்றுமில்லாத வடியேன் எங்ஙனே துதிக்கவல்லேன்? ஒரு துரும்பைத் தூணாக்கவல்ல ஸர்வசக்தியான நீ பூர்ணநுக்ரஹம் பண்ணுமளவில் வாய்க்க மாட்டாததொன்றில்லை. ஆனபின்பு அங்ஙனே அநுக்ரஹித்து என் வாக்கினாலே சில இளையபுன்கவிதைகளைக் கொண்டருளாய் என்கை.

நீ அநுக்ரஹியாதொழியில் தொடங்கின விந்த ஸ்துதி தலைக்கட்ட மாட்டாதென்கை. ... - .... ... (2)

{ புவநாச்ரயபூஷணாஸ்த்ரவர்க்கம் மநஸி த்வந்மயதாம் மமாதநோது, }
{ வபுராஹவபுங்கவ! த்வதீயம் மஹிஷீண மநிமேஷதர்சநீயம். (3) }

(அந்.) ஹே ஆஹவபுங்கவ! புவநாச்ரயபூஷணாஸ்த்ரவர்க்கம் மஹிஷீணாம் அநிமேஷதர்சநீயம் த்வதீயம் வபு: மம மநஸி த்வந்மயதாம் ஆதநோது.

புட்குழியெம்போரேறே! உலகங்களுக்கு ஆச்ரயமாயிருக்கின்ற திவ்யபூஷணங்களென்ன திவ்யாயுதங்களென்ன இவற்றையுடையதாயும், பிராட்டிமார்கள் இமைகொட்டுதலின்றிக்கே [இடையறுமல்] ஸேவித்துக்கொண்டிருக்கத் தகுந்ததாயுமுள்ள உனது திருமேனியானது எனது நெஞ்சினுள்ளே உன்னைப்பற்றின பாவநாப்ராகர்யத்தை யுண்டுபண்ணவேணும். என்னுள்ளமானது உனது திருமேனியையே இடைவிடாது சிந்தித்துத் தந்மயமாகவே ஆய்விட வேணுமென்கை.

திருவாபரணங்கள் அழகுக்கு உடலாயிருந்தாலும் திவ்யாயுதங்கள் விரோதிநிரஸநத்திற்கு உறுப்பாகையாலே, கண்டார் வெருவ வேண்டியிருக்கும். எம்பெருமான் திறத்திலோவென்னில் இங்ஙனே யில்லைகிடீர்- ஆபரணங்களோடு ஆயுதங்களோடு வாசியற எல்லாமும் பரமபோக்யமாய்ப் பல்லாண்டு பாடவேண்டியிருக்குமென்பது முதல் விசேஷணத்தின் உள்ளுறை பொருளாகும்.

திருவாய்மொழியில் (1—5—1) *வளவேழுலகு ஈடு முப்பதாறாயிரத்தில்—"அஸ்த்ரபூஷணாத்யாயத்திலே, ஸ்ரீகௌஸ்துபத்தாலே ஜீவஸமஷ்டியை தரிக்குமென்றும், ஸ்ரீவத்ஸத்தாலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை தரிக்குமென்றும் சொல்லா நின்றதிறே." என்றுள்ள ஸ்ரீஸூக்திகளை இங்கு முதல்பாதத்திற்குச்சேர அநுஸந்திப்பது.

பூஷணங்களாவன—*செங்கமலக்கழலில் சிற்றிதழ்போல் விரலில் சேர்திகழாழிகளும் கிண்கிணியும், அரையில் தங்கிய பொன்வடமு மித்யாதியாகப் பெரியாழ்வாரும். *கிரீட மகுடசூடாவதம்ஸ மகரகுண்டல க்ரைவேயக ஹாரேத்யாதியாக [கத்யத்தில்] எம்பெருமானாரும் அருளிச்செய்தவை. ஆயுதங்கள் ஷோடசாயுதஸ்தோத்ராதிகளில் ப்ரஸித்தம். * செம்பொனிலங்கு வலங்கை வாளி தூண்சிலை தண்டொடு சங்கமொள்வாள், உம்பரிருசுடராழியோடு கேடக மொண்மலர் இத்யாதி. (பெரியதிருமொழி 2—8—3).

[மஹிஷீணும் அநிமேஷதர்சநீயம்] *த்ரைலோக்யராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத் கலாம்* என்றும்* வடிவிணையில்லா மலர்மகள்* என்றும் சொல்லுகிற படியே அழகில் ஒப்புயர்வற்ற தேவிமார்களும் இடைவிடாது கண்டுகொண்டிருக்க வேண்டும்படியிருப்பதாகக் கூறினது—திருமேனியின் ஸௌந்தர்யாதிசயத்தைக் கூறியவாறு.

மஹிஷீணும் என்பதற்கு மஹர்ஷீணும் என்று பொருள் கூறினலும் தகும். உள்ள சொல்லுக்கு இப்பொருள் துர்லபமென்றும் ஆசிரியர்க்கு அடியோடு விவக்ஷிதமன்று என்றும் சிலர் சொல்லக்கூடும். யஜுர்வேதத்தில் (1—1—28) "மஹிஷீவ த்வத் ரயி:" என்றவிடத்தில், மஹிஷியென்றதை மஹர்ஷியென்றபடியாய் பட்டபாஸ்கரர் பாஷ்யம் செய்துள்ளார், வேதாந்தகுருவின் வேதகந்தியான திவ்யஸூக்திகளுக்கு வேதச்சாயையிலே பொருள் கூறுவதும் பொருந்துமென்று பாவியேன் நினைவு.

இங்ஙனே நலிந்து பொருள்கொள்வதில் என்ன சுவையுள்ளதென்னில், ப்ரஹ்ம பாவனை சிறிதுமின்றிக்கே கர்மபாவனைகநிஷ்டர்களாயிருந்த தண்டகாரண்ய வாஸிகளான முனிவர்களுங்கூட இராமபிரானுடைய வடிவழகிலே நெஞ்சைப் பறிகொடுத்தார்களென்று பரக்கப்பேசியுள்ள வான்மீகி முனிவரின் அநுபவம் அநுஸந்தேயம். மஹிஷீணும் என்றருளிச்செய்த தேசிகனுக்கு, பிராட்டிமார்கள் மஹர்ஷிகள் என்ற இரண்டு பொருளும் திருவுள்ளமானதென்க.

ஆநநோது என்று லோட்ரூபமாகவன்றிக்கே "ஆநநோதி" என்று லட்ரூபமாகவே அநுஸந்திப்பாருமுளர்; இதில் சுவை மிகும். ... .... (3)

{ அபிரக்ஷிது மக்ரத: ஸ்திதம் த்வாம் ப்ரணவே பார்த்தரதே ச பாவயந்த:,
அஹிதப்ரசமைரயத்நலப்யை: கதயந்த்யாஹவபுங்கவம் குணஜ்ஞா: (4) }

(அந்) ஹே ஆஹவபுங்கவ! அபிரக்ஷிதும் ப்ரணவே பார்த்த ரதே ச அக்ரத: ஸ்திதம் த்வாம் பாவயந்த: குணஜ்ஞா: அயத்நலப்யை: அஹிதப்ரசமை: ஆஹவ புங்கவம் கதயந்தி.

புட்குழியெம்போரேறே; ஸம்ரக்ஷணத்தொழிலை நடத்துதற்காக, ப்ரணவத்தின் முகப்பிலும் அர்ஜுனனது தேரின் முகப்பிலும் வீற்றிரா நின்ற தேவரீரை நன்கு சிந்தை செய்யாநின்ற ஆழ்வார்கள் போரேறு என்கிற திருநாமத்தினல் தேவரீரை வ்யபதேசித்தருளுகிறுர்கள்; அநிஷ்ட நிவாரணங்களை தேவரீர் எளிதாக செய்தருள்வதுதான் இதற்குக் காரணம்.

***—திருப்புட்குழி யெம்பெருமானுக்கு ஸமரபுங்கவரென்கிற திருநாமம் வடமொழியில் வழங்கி வருகின்றது. திருமங்கையாழ்வார் பெரியதிருமடலில் *புட்குழியெம்போரேற்றை* என்றருளிச் செய்ததுவே இதற்குக் காரணம். போரேறு என்பதும், ஸமரபுங்கவ: ரணபுங்கவ: ஆஹவபுங்கவ: என்பவைகளும் பரியாயம். இந்தத் திருநாமம் மிகவும் உபபந்நம் என்கிறுர் இந்த ச்லோகத்திஞல்.

எம்பெருமானே ஸர்வரக்ஷகனென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டப்ராப்தியைச் செய்வதே ரக்ஷணமாகும். ஆகவே விரோதி நிரஸநமே ரக்ஷணத்தில் முக்கியமாயிருக்கும். போரேறு என்கிற திருநாமம் விரோதி நிரஸந ஸாமார்த்தியத்தை நன்கு புலப்படுத்துகின்றதாதலால் இத்திருநாமம் 'ஸர்வ ரக்ஷகன் என்னுமிடத்தையே மூதலிக்கின்றதென்று திருவுள்ளம்.

எம்பெருமானுடைய ரக்ஷகத்வம் சப்தப்ரமாணத்தாலும் ப்ரத்யக்ஷப்ரமாணத்தாலும் ஏற்கெனவே ஸித்தம். எங்ஙனே யென்னில்; ஸகல வேதங்களுக்கும் மூலமாகிய ப்ரணவத்தின் முகப்பிலுள்ள அகாரம் பகவத்வாசகம். அந்த அகாரமானது "அவ—ரக்ஷணே" என்கிற தாதுவடியாக நிஷ்பத்திபெற்றதாதலால் ரக்ஷகன் என்பதையே தெரிவித்தாயிற்று. இது சப்தப்ரமாண ஸித்தமான ரக்ஷகத்வம். "பற்றலர் வீயக்கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர்முன் நின்றான்" என்கிறபடியே பாண்டவபக்ஷபாதியாய் அர்ஜுநனுடைய தேரின் முன்னணியிலிருந்துகொண்டு விரோதி நிரஸநம் செய்து ரக்ஷகத்வத்தைக் காட்டியருளினது ப்ரத்யக்ஷப்ரமாணஸித்தம். [இதுவும் சப்தப்ரமாணஸித்தமே யென்னிலுமென்க.] ஆக இப்படிகளாலே ரக்ஷகத்வப்ரஸித்தி சீறுபெற்றிருப்பதை விவேசநம் செய்தருளின ஆழ்வார்கள் ரக்ஷகன் என்பதற்குப் பர்யாயமாகவே போரேறு என்று திருநாமம் சாத்தினார்கள் என்றதாயிற்று.

இதில் குணஜ்ஞா: என்றது ஆழ்வார்களையே, "புட்குழியெம்போரேற்றை" என்றருளிச் செய்த திருமங்கையாழ்வாரையே முக்கியமாகத் திருவுள்ளம் பற்றியதாகும்.

பிற்காலியாமல் முன்னிற்பவனே போரேறு என்று பெயர் பெறுவதற்குத் தகுதியுடையவனாதலால் அங்ஙனே முன்னிற்கும்படியைப் பூர்வார்த்தத்தினால் நிரூபித்தருளுகிறார் · ப்ரணவத்தின் முன்னேயும் பார்த்தனது தேரின் முன்னேயும் நிற்கும்படியையிட்டு. அர்ஜுநனுடைய தேரின்முன்னே நின்றது போரேறு என்கிற திருநாமத்தை ஸமர்த்திப்பதில் ஸமர்த்தமாகக் குறையில்லை; ப்ரணவத்தின் முன்னே நின்றதற்கும் போரேறு என்கிற திருநாமத்திற்கும் என்ன சேர்த்தி? என்று சிலர் சங்கிக்கக்கூடும். இங்கு ஆசிரியருடைய திருவுள்ளம் யாதென்னில்; எம்பெருமான் தான் அகாரவாச்யனா யிருந்துகொண்டு தன்னுடைய ஸர்வரக்ஷகத்வத்தை சாஸ்த்ரமுகத்தாலே ப்ரஸித்தப்படுத்தினவளவேயன்றிக்கே, தேர்முன் நின்றும் அந்த ரக்ஷகத்வத்தை க்ரியாபர்யவஸாயியாக்கி நிலைநிறுத்திக்கொண்டான் என்று அருளிச்செய்வதேயாகும்.

திருப்புட்குழி யெம்பெருமானுக்கு விஜயராகவன் என்று ஸுப்ரஸித்தமாக வழங்கிவரும் திருநாமத்திற்கிணங்க ஸ்ரீராமாவதாரத்திலே போர்முனைகளில் நின்று ரக்ஷணம் செய்தருளினபடிகளை அருளிச்செய்யலாமாயிருக்க, அதைவிட்டு ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் பார்த்தன் தன் தேர்முன் நின்றமையை இங்கு அருளிச்செய்ததேன்? என்னில்; தர்மியின் ஐக்யத்தாலே ராமாவதாரத்தோடு க்ருஷ்ணாவதாரத்தோடு வாசியில்லையிறே. கண்ணபிரானைக் கண்ணெதிரே கண்டு போற்றுகின்ற ஆய்ச்சிகளும் "சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி" என்னா நின்றார்களிறே. யசோதைப் பிராட்டிதானும் "கரியகுழல் செய்ய வாய் முகத்து என் காகுத்தநம்பீ வருகவிங்கே" என்றழையாநின்றாள் கண்ணனை.

அபிரக்ஷிதுமக்ரத: ஸ்திதத்வம் இராமபிரானுக்குமுள்ளதேயாயினும் ஒரடியானுக்குத்தான் பரமவிதேயனா யிருக்கும்படியைக் காட்டிக்கொண்டு போர் முன்நின்றநிலை க்ருஷ்ணாவதாரத்திலேயே காணக்கூடியதாதலால், திருப்புட்குழியாகிற அர்ச்சாவ

தாரத்திலுள்ள பக்த பராதீநத்வ மஹாகுணத்திற்கு ஏற்ப பார்த்தரதே அக்ரத: ஸ்தித்வமே ஆசிரியர் திருவுள்ளத்தில் பொலிவு பெற்றது போலும்.

அக்ரத: என்கிறவிது [ப்ரணவே அக்ரத:, பார்த்தரதே அக்ரத:] என்று இரண்டிடத்திலும் அந்வயிக்கக்கடவது. போரில் மாத்திரம் முன்னிற்பவனன்று; பகாராதியாக வுள்ளவிடங்களிலெங்கும் முன்னிற்பவன்; என்று சாடுவாகக் காட்டுகின்றார் போலும். ப்ரணவமும் பகாராதி; பார்த்தரதமும் பகாராதி; புட்குழியும் பகாராதி; போரும் பகாராதி; கிம் பஹுநா! இந்த ஸ்தோத்ரமும் பகாராதி.

[அயத்நலப்யை: அஹிதப்ரசமை:] விரோதிநிரஸநங்களை எளிதாகச் செய்தருளினது விபவாவதாரங்களில் மாத்திரமன்று. அர்ச்சையான இங்குத்தை நிலையிலும் அது குறையற்றது என்னுமிடத்தைக் காட்டியருள்வதற்காக லப்தை: என்னாதே லப்யை: என்றருளிச் செய்தாராயிற்று. அஹித பதம் சத்ருவாசகமாகவும் அநிஷ்ட வாசகமாகவும் ப்ரஸித்தம். அவ்விரண்டு பொருளும் இங்கு விவக்ஷிதம். விபவாவதாரங்களில் சத்ருநிரஸநம்; அர்ச்சாவதாரத்தில் அநிஷ்டநிரஸநம், இங்ஙனே பிரித்துச் சொல்லுகிறதும் ஊற்றத்தைப்பற்ற. ப்ராயிகமென்னபடி.

மஹாத்ம: என்றோ முநீந்த்ரா: என்றோ கூறுமல் குணஜ்ஞா: என்றது மிகவுமழகியது. திருக்குணங்களில் ஈடுபடுவதற்கென்றே திருவவதரித்தருளின ஆழ்வார்கள் தேவரீரை இங்ஙனே அருளிச்செய்தது குணாநுஸந்தாநநிபந்தநமென்று தெரிவித்தபடி.

உலகத்தில், மந்த்ரபலம் அஸ்த்ரபலம் என்ற இரண்டினாலும் ரக்ஷிப்பதுண்டே; எம்பெருமானும் அவ்வண்ணமே ரக்ஷித்தருளுகிறனென்று காட்டுவதும் இரண்டாவது பாதத்தில் விவக்ஷிதம். .. ... ... (4)

{ கமலா நிரபாயதர்மபத்நீ கருணாத்யா: ஸ்வயம் ருத்விஜோ குணாஸ்தே,
அவநம் ச்ரயதாம் மஹீநமாத்யம் ஸ ச தர்மஸ்த்வதநந்ய ஸேவநீய:. (5) }

(அந்) கமலா நிரபாயதர்மபத்நீ, கருணாத்யா: தே குணா: ஸ்வயம் ருத்விஜ:; ச்ரயதாம் அவநம் அஹீநம் ஆத்யம்; ஸ: தர்ம: த்வதநந்ய ஸேவநீய:.

பிராட்டியோ ஒருநாளும் விட்டுப் பிரியாத தர்மபத்நியாயிரா நின்றாள்; அருள் முதலிய திருக்குணங்கள் தாமே ருத்விக்குக்களாயிரா நின்றன; ஆச்ரிதர்களைக் காத்தருள்வதே உத்தமமான பலனாக இருக்கின்றது. ஆச்ரிதரக்ஷணமாகிற அந்த தர்மம் தேவரீர் தவிர வேறொருவராலும் அனுட்டிக்க முடியாதது.

ஆஹவபுங்கவன் என்கிற திருநாமத்திற்கு 'யுத்தத்தில் ஸமர்த்தன்' என்கிற அர்த்தம்போலவே 'யாகம் செய்வதில் ஸமர்த்தன்' என்கிற பொருளும் உள்ளது. ஆஹவ மென்னும் வடசொல் யுத்தத்திற்குப்போலவே யாகத்திற்கும் வாசகமென்னுமிடம் ப்ரஸித்தம். ஆகவே, திருப்புட்குழி யெம்பெருமானுக்கு ஆஹவபுங்கவ னென்கிற திருநாமம் 'யாகத்தில் வல்லவன்' என்ற காரணத்தினாலும் நிகழ்ந்ததாயிருக்கலாமென்று சமத்காரம் பொலிய அருளிச் செய்கிறார்.

பத்நியில்லாதவனுக்கு வேள்விசெய்ய அதிகாரமில்லை; ஆகையாலே பத்நீ விசிஷ்டத்வம் முந்துற முன்னம் வேண்டும்; இங்கு யஜ்வாவாகச் சொல்லப்படுகிற

எம்பெருமான் நித்யாநபாயிநியான கமலேக்குக் கேள்வனுகையாலே அந்த அதிகாரம் குறையற்றதாயிற்று. யாஜ்ஞிககார்ய நிர்வஹணத்திற்கு ருத்விக்குக்கள் இருந்து தீரவேண்டும்; கருணை முதலிய திருக்குணங்கள் அந்த ஸ்தானத்திலுள்ளனவாம். அதாவது—அத்வர்யுப்ரப்ருதிகளாக ஆகின்றன. ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதே சிறந்த பலனுகத் தலைக்கட்டுகின்றது. "அவநம் ச்ரயதாம்" என்றதை 'ச்ரயதாம் அவநம்' என்று மாற்றி அந்வயித்துக்கொள்க. ச்ரிதாநாம் என்று பூதகாலமாகச் சொல்லாதே ச்ரயதாம் என்று வர்த்தமாநமாக அருளிச்செய்கையாலே ஆச்ரயிக்கவொருப்படுமளவிலேயே ரக்ஷணம் ஸித்தமென்பது காட்டப்படுகிறது.

அஹீநம் ஆத்யம் என்றதில் ச்லேஷம் பொருந்தியுள்ளது. அஹீநம் என்று ஒரு யாகவிசேஷத்திற்குப் பெயர்; ஆத்யம்—சிறந்ததான. அஹீநம் – அஹீநமென்னும் யாகம் என்பதும் ஒரு பொருள். "அத-பக்ஷணே" என்கிற தாதுவிலிருந்து 'ண்யத்-ப்ரத்யயாந்தமாக ஆத்யம் என்று நிஷ்பந்நமாகி, பலன் என்கிற பொருளையும் சொல்லக்கடவது. இப்பக்ஷத்தில் அஹீநம் என்பது விசேஷணமாகிறது. (முந்தின பக்ஷத்தில் அது விசேஷ்யமாய் நின்றது.) அஹீநம்—ஒருநாளும் குறையுறாத, ஆத்யம்—பலன் என்றபடி. பிராட்டியோடு இடைவிடாது கூடியிருப்பதற்கும் கருணை முதலிய திருக்குணங்களையுடையராயிருப்பதற்கும் என்ன பலனென்றால் ஆச்ரிதரக்ஷணமே பலன் என்றதாயிற்று.

அஹீநஸத்ர விஷயமாகப் பூர்வமீமாம்ஸையில் மூன்றாவது அத்யாயத்தில் மூன்றாம் பாதத்தில் விசாரம் காணத்தக்கது. யஜுர் வேதத்தில் ஆறாவது காண்டத்தில் "திஸ்ரோஹீநஸ்ய யஜ்ஞஸ்ய" என்றும் 'த்வாதசாஹீநஸ்ய யஜ்ஞஸ்ய" என்றுமுள்ளது முணர்க.

முதல் பாதத்தையும் இரண்டாவது பாதத்தையும் சேரப்பிடித்து ஊன்றி நோக்குமிடத்து, பிராட்டி ஸம்பந்தமடியாகவே எம்பெருமானுக்குக் கருணை நிறம் பெறுகின்றது என்னுமிடம் விவக்ஷிதமாகத் தெரிகின்றது. இது விஷயமாகக் கம்பர் பேசியுள்ள ஒரு பொருட்சுவையும் இங்குக் காட்டுவோம்.

(வாலிவதைப்படலத்தில்) வாலி ஸ்ரீராம பாணத்தினால் அடிபட்டு வீழ்ந்து பெருமாளை நோக்கிப் பலபல பேசுகையில் "அரக்கரோரழிவு செய்து கழிவரேல் அதற்கு வேறோர், குரக்கினத்தரசைக்கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ? இரக்க மெங்கு உகுத்தாயென்பால் எப்பிழைகண்டாயப்பா, பரக்கழியிது நீ பூண்டால் புகழை யார் பரிக்கற்பாலார்?" என்று கேள்வி கேட்டான். இதற்குப் பெருமாள் பணிக்கின்ற விடைகள் ஒருபுறமிருக்க, வாலிதானே தானறிந்த விடையொன்று விளம்புகின்றான் காண்மின்;— "கோவியல் தருமமுங்கள் குலத்துதித்தோர்கட் கெல்லாம், ஓவியத்தெழுத வொண்ணாவுருவத்தாய்! உடைமையன்றோ, ஆவியைச் சனகன் பெற்றவன்னத்தை அமிழ்தின்வந்த, தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலுஞ் செய்கை.' என்ற செய்யுளில் பின்னடிகள் நோக்கத்தக்கன. பிராட்டி உடனிருந்தால் நீ இத்தகைய இரக்கமற்ற செயல் செய்திருக்கமாட்டாய்; அவள் பிரியலுற்றதனாலேயே நீ இங்ஙனே கருணையற்றுச் செய்யலாயிற்று என்றபடி. மஹா வித்வானான அரசாணிபாலை ஸ்ரீ வேங்கடாத்வரியும் இக்கருத்தைத் தழுவி

லக்ஷ்மீ ஸஹஸ்ரத்தில்—"த்வய்யேவாயததே க்ருபா ரகுபதே: தேவஸ்ய ஸத்யம் யதோ வைதேஹி! த்வதஸந்நிதௌ பகவதா வாலீ நிராகா ஹத:, நிந்யே காபி வதம் வதூ: தவது ஸாந்நித்யே த்வதங்கவ்யதாம் குர்வாணேப்யவித: பதந்நசரண: காகோ விவேகோஜ்ஜித:". என்றொரு ச்லோகம் பணித்தார். இதன் கருத்து:—பெரிய பிராட்டியாரே! பெருமாள் காருணிகரென்று பேர் பெற்றிருந்தாலும் அவருடைய கருணை உம்முடைய அதீனமேயாகும். இஃது எங்ஙனே தெரிகின்றதென்னில்; அப்பெருமாள் உம்மோடு கூடியிருந்த காலத்திற் செய்த செயலையும் உம்மைப்பிரிந்திருந்த காலத்திற்செய்த செயலையும் நோக்குமிடத்து இது நன்கு தெரிகின்றது. காகாஸுரனிற்காட்டில் கொடிய பாதகியில்லை. பெருந்தீம்பனான அவனையும் பெருமாள் உயிரோடேவைத்துக் காத்தருளினது உம்முடைய ஸாமீப்யப்ரபாவத்தினாலன்றோ? நீர் மிதிலையில் வாழ்ந்த காலத்தில் அவர் தாடகை யென்கிற ஒரு பெண்ணைக் கொலை செய்தார்; நீர் இலங்கைப்பதியிலிருந்த காலத்து அவர் நிரபராதியான வாலியை வதஞ் செய்தார். ஆகவே உம்முடைய ஸம்ச்லேஷம் அவர்க்குக் காருண்யத்தை ஊட்டுகின்றதென்றும் உம்முடைய விச்லேஷம் அவரிடத்தினின்று அதனை ஓட்டுகின்றதென்றும் சொல்லத் தட்டுண்டோ? என்றவாறு.

[ஸ ச தர்ம: த்வதநந்ய ஸேவநீய:] சரணாகத பரித்ராணம் என்கிற அந்த தருமம் தேவரீருக்கே தகுந்தது என்றபடி. லக்ஷ்மீபதித்வ காருணிகத்வங்கள் தேவரீருக்கே யுள்ளவையாதலால் தத்ப்ரயோஜ்யமான ஆச்ரித்ரக்ஷணமும் தேவரீருக்கே உற்றதுஎன்றதாயிற்று. "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ" என்றவிடத்திலுள்ள தர்மசப்தத்தாலும் "விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞ:* என்றவிடத்திலுள்ள தர்மசப்தத்தாலும் விவக்ஷிதமான பொருளையே இவ்விடத்திலும் ஆசிரியர் விவக்ஷித்து தர்மசப்தப்ரயோகம் பண்ணியருளினாராயிற்று. யாக ரூபமான தர்மம் என்பதும் ஒரு அர்த்தம். ... ... .. ... .... ... (5)

{ க்ருபணாஸ்ஸுதிய: க்ருபாஸஹாயம் சரணம் த்வாம் ரணபுங்கவ! ப்ரபந்நா:,
அபவர்கநயாதநந்யபாவா: வரிவஸ்யாரஸமேகமாத்ரி யந்தே. (6) }

(அந்) ஹே ரணபுங்கவா க்ருபணா: ஸுதிய: க்ருபாஸஹாயம் த்வாம் சரணம் ப்ரபந்நா: அநந்ய பாவாஸ் ஸந்த: அபவர்க்க நயாத் ஏகம் வரிவஸ்யாரஸம் ஆத்ரியந்தே.

*நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்* என்றிருக்கு மதிகாரிகள் காருணிகரான தேவரீரை ரக்ஷகராகப் பற்றினவர்களாய்ப் பரமைகாந்திகளாய்க்கொண்டு, மோக்ஷத்திலும் கைங்கரியமே உத்தேச்யமானவோபாதி இங்கும் தேவரீருக்குத் தொண்டு பூண்டு அமுதமுண்பதொன்றையே விரும்பி வர்த்தியாநின்றார்களென்கை.

ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் உடையவர்களே ப்ரபத்திக்கு அதிகாரிகளாதலால் அந்த அதிகார ஸம்பத்தியை முதலிரண்டு பதங்களாலே காட்டியருளுகிறார். க்ருபணா:—தம்பக்கலில் ஒன்று மில்லாமையைச் சொல்லிக்கொள்பவர்கள் என்கை. "இடகிலேன் ஒன்றட்டகில்லேன், கடவுணுகிக்காலந்தோறும் பூப்பறித் தேத்தகில்லேன்" "ந தர்ம நிஷ்டோஸ்மி ந சாத்ம வேதீ." இத்யாதிப்படியே யிருப்பவர்கள்.

ஸுதிப:—"உனக்குப் பணிசெய்திருக்குந்தவமுடையேன் இனிப் போயொருவன் தனக்கும் பணிந்து கடைத்தலை நிற்கை நின்சாயை பழிவுகண்டாய்" என்னும் படியான அத்யவஸாயமுடையவர்களென்கை.

அபவர்க்கநயாத் என்றது முக்திதசையில்போலே என்றபடி. பாஷாணகல்பதைவ முக்தி:" என்றும் "ஆத்யந்திகது:க்கத்வம்ஸ ஏவ முக்தி:" என்றும் இப்புடைகளிலே சொல்லாதே பரமஸாம்யாபத்தியே மோக்ஷம் என்பார்க்கு கைங்கர்ய ஸாம்ராஜ்யமே அந்தமில் பேரின்பமாக அறுதியிடப்பட்டுள்ளது. அந்தப்பேரின்பந் தன்னையே இங்கும் அநுபவிக்கப் பாரிக்கின்றார்களாம் பரமைகாந்திகள். ஆழ்வான் ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் "த்வத்ஸாம்யமேவ பஜதாமபிவாஞ்ச்சனி த்வம்" என்ற ச்லோகத்திலே "த்வத்தாஸ்யமேவ விதுஷாம் பரமம் மதம் தத்" என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம்.

இந்தச்லோகத்தால்—தேவரீருடைய ஸந்நிதியில் அத்தாணிச்சேவகமே அடியேனுக்கும் உற்றதாக வேணும் என்று பிரார்த்திக்கின்றமை உய்த்துணரத்தக்கது. வரிவஸ்யா—கைங்கரியம். (6)

{ அவதீர்ய சதுர்விதம் புமர்த்தம் பவதர்த்தே விநியுக்த ஜீவிதஸ்ஸன், }
{ லபதே பவத: பலாநி ஜந்து: நிகிலாந்யத்ர நிதர்சநம் ஜடாயு:. (7) }

(அந்)ஜந்து: சதுர்விதம் புமர்த்தம் அவதீர்ய பவத்அர்த்தே விநியுக்த ஜீவிதஸ் ஸந் பவத: நிகிலாநி பலாநி லபதே; அத்ர ஜடாயு: நிதர்சநம்.

புட்குழியெம்போரேறே! உலகில் பிறந்த பிராணி எவனாயினும் அறம் பொருளின்பம் வீடென்கிற நான்கு புருஷார்த்தங்களையும் ஒரு பொருளாக மதியாமல் தேவரீர் விஷயத்திலேயே தன் உயிரை உபயோகப்படுத்துவானாகில் அவன் தேவரீர் பக்கலிலிருந்து ஸகல பலன்களையும் பெறுவான்; இவ்விஷயத்தில் பெரியவுடையாரே தகுந்த சான்று.

*ஏறாளுமிறையோனும் என்கிற திருவாய்மொழியில் ஆழ்வார் அருளிச்செய்கிறபடி எம்பெருமானுக்கு உபயோகப்படுமத்தனையே ஆத்மாவுக்கு வேண்டுவது'என்கிற உறுதியுள்ளவர்களாயிருக்குமத்தனையே வேண்டுவது; சதுர்வித புருஷார்த்தங்களுள் ஒன்றிலும் விருப்பமின்றிக்கே கீழ்ச்சொன்ன நிஷ்டையிலெ நிலைநின்றிருக்குமவர்கள் எம்பெருமானிடத்திலிருந்து ஸகல பலன்களையும் பெறத் தட்டில்லை; பெற்றவர்கள் ஆரேனு முண்டோ வென்னில், ஜடாயுமஹாராஜர் உண்டு என்றாராயிற்று.

அறம்பொருளின்பங்களாகிற த்ரிவர்கத்தை வெறுத்தாலும் அபவர்கத்தையும் வெறுக்கவொண்ணுமோ வென்னில்; "மாயாப் பெருவிறலுலகம் மூன்றினொடு நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ தெள்ளியோர்குறிப்பே" என்றாரிறே ஆழ்வார். பவதர்த்தே விநியுக்த ஜீவிதத்வமாவது—'எம்பெருமானுக்கு என்வருகிறதோ' என்று வயிறு பிடித்திருக்கை. "பெரியவுடையாரும் பிள்ளை திருநறையூரரையரும் உடம்பை யுபேக்ஷித்தார்கள்" என்கிற ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம்.

*செய்த்தலை யெழுநாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள, மைத்தடமுகில்வண்ணன் பக்கல் வளரவிடுமின்களே* [பெரியாழ்வார் திருமொழி] என்கிற

படியே அத்தலையில் திருவுள்ளமானபடியே ஆகக்கடவது; எதையும் நாமாக அபேக்ஷிப்பது தகுதியன்று—என்றிருக்குமிருப்பை முதல் பாதம் காட்டும். ஐந்து: என்கையாலே ஜநிதர்மாக்களாயுள்ளவர்கள் ஆரேனுமாகவுமாம்; "எக்குற்றவாளர் எது பிறப்பு ஏதியல்வாக நின்றோர்" என்கிறபடியே அதில் ஒரு நிர்ப்பந்தமில்லை; த்வதர்த்தே விநியுக்த ஜீவிதத்வ மொன்றே பேற்றுக்கு வேண்டுவது என்று காட்டப்பட்டது (7)

{ சரணாகத ரக்ஷணவ்ரதீ மாம் ந விஹாதும் ரணபுங்கவார்ஹஸி த்வம்,
விதிதம் புவநே விபீஷணோ வா யதி வா ராவண இத்யுதீரிதம் தே. (8) }

(அந்) ஹே ரணபுங்கவ! சரணாகதரக்ஷணவ்ரதீ த்வம் மாம் விஹாதும் நார்ஹஸி. "விபீஷணோ வா யதி வா ராவண:" இதி தே உதீரிதம் புவநே விதிதம்.

புட்குழியெம்போரேறே! சரணாகதபரித்ராணத்தையே விரதமாகக்கொண்டிருக்கின்ற தேவரீர் அடியேனைக் கைவிடத்தகாது; "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவண: ஸ்வயம்" என்று தேவரீர் அருளிச்செய்த திருமுகப்பாசுரம் லோகப்ரஸித்தமாயிரா நின்றதிறே

இதில் பூர்வார்த்தத்தோடு உத்தரார்த்தத்திற்கு ஸங்கதியென்னென்னில்; சரணாகதர்களைக் கைவிடாது காத்தருள்வதையே தொழிலாகக் கொண்டிருக்கின்ற தேவரீர் அடியேனைக் கைவிடலாகாது என்று கூறிய தேசிகனை நோக்கி எம்பெருமான், 'பிள்ளாய்! சரணாகதபரித்ராணத்தில் நான் நெகிழநிற்பவனல்லேனென்பது உண்மையே; நீர்தாம் சரணாகதனென்று பொரிபுறந்தடவிப் பேசுகிறீரத்தனை போக்கி, உண்மையில் சரணாகதரல்லீர் கிடீர்; உம்மை ரக்ஷிக்கை எனக்குப்பரமன்று காணும்' என்றருளிச் செய்ய, அதற்கு உத்தரமாக அவதரித்தது உத்தரார்த்தம்.

சரணாகதோஸ்மி என்று பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமேயாடுகின்றவர்களையும் தேவரீர் மெய்யே சரணாகதர்களாகவே திருவுள்ளம்பற்றிக் காத்தருளுமியல்வுடையீரென்னுமிடம் ஸ்ரீராமாயணப்ரஸித்தமிறே.

ஸ்ரீவிபீஷணாழ்வான் அடைக்கலம் புகுந்தவன்று' பாவசுத்தியுடையவனல்லாமையாலே அவனை அங்கீகரித்தருளலாகாது' என்று வலிதாக ஸுக்ரீவ மஹாராஜருள்ளிட்டார் ஆக்ஷேபிக்க, அப்போது பலவிதமாக வாதவிவாதங்கள் நடைபெற்று• முடிவாகப் பெருமாள்* மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந* என்று ஸ்வஸித்தாந்தத்தையருளிச் செய்து "ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட! தத்த மஸ்யாபயம் மயா, விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவண: ஸ்வயம்" என்று சொல்லி அவனையழைத்துக்கொண்டு வரும்படி ஸுக்ரீவன்தன்னையே போகவிட்டார். 'விபீஷணனை அழைத்துக்கொண்டுவா' என்றிவ்வளவே சொல்லாமல்* யதி வா ராவண: ஸ்வயம்* என்று சொன்னது பெருமாளுடைய ஹ்ருதயவைசால்யத்தைக் காட்டுகின்றது. மிகக் கொடியவனான இராவணன்தானே விபீஷணனாக மாறுவேடம் பூண்டு கள்வத்தொண்டனாய் வந்திருந்தாலும் அவனையும் விடாதே கொண்டுவா; நாம் இருக்குமிடத்தேற வந்து சரணம் என்று சொன்ன உக்திமாத்திரமே அமையும்; அந்த உக்தி அஹ்ருதயமாகவுமாம் ஸஹ்ருதயமாகவுமாம்; அதில் நமக்குக் கணிசமில்லை—என்கிற திருவுள்ளத்தைப் பெருமாள் இங்கு விளங்கக் காட்டியருளினாரிறே.

*சுரிகுழற்கனிவாய்த் திருவினைப்பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கனை இராவணனிற் காட்டில் அபராதி வேறொருவனில்லை; அவனையும் திருவுள்ளம்பற்ற ஸிந்தராயிருந்த தேவரீருக்கு அடியேனைத் திருவுள்ளம்பற்றுகை கிம்புநர்ந்யாயஸித்த மென்றாயிற்று. ... ... ... (8)

{ புஜகேந்த்ரகருத்மதாதிலப்யை: த்வதநுஜ்ஞாநுபவ ப்ரவாஹபேதை:,
ஸ்வபதே ரணபுங்கவ! ஸ்வயம மே பரிசர்யாவிபவை: பரிஷ்க்ரியேதா:. (9) }

(அந்) ஹே ரணபுங்கவ! புஜகேந்த்ரகருத்மதாதிலப்யை: த்வத் அநுஜ்ஞாநுபவப்ரவாஹபேதை: ஸ்வபதே மே பரிசர்யாவிபவை: ஸ்வயம் பரிஷ்க்ரியேதா:,

புட்குழியெம்போரேறே! திருவனந்தாழ்வான் பெரியதிருவடி முதலான நித்ய ஸூரிகளுக்கே கிடைக்கக்கூடியவைகளும், உம்முடைய அநுஜ்ஞாகைங்கர்யப்ரவாஹ விசேஷங்களும. பகவத்பாதாரவிந்தவிஷயங்களுமான மதீயகைங்கரியங்களாலே தேவரீர் தாமே பரிஷ்காரமடைந்தவராக ஆகக்கடவீர்.

பகவத்கைங்கர்யங்கள் ஆஜ்ஞாகைங்கர்யமென்றும் அநுஜ்ஞாகைங்கர்யமென்றும் இருவகைப்படும். ச்ருதிஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட நித்யநைமித்திககருமங்கள் ஆஜ்ஞாகைங்கர்யங்களாகும். திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை முதலியவைகள் அநுஜ்ஞாகைங்கரியங்களாகும். உபாயநிஷ்டர்கள் ஆஜ்ஞாகைங்கரியங்களிலே ஊன்றிப் போருவர்கள். உபேயபரர்கள் அநுஜ்ஞாகைங்கரியங்களிலே ஊன்றிப்போருவர்கள்.

அந்த உபேயபரர்களின் வகுப்பிலே தம்மைச் சேர்த்துக்கொள்ளவேணுமென்று பிரார்த்திக்கிறாரிதில். *ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமைசெய்ய வெண்டுநாம்.* என்கிறபாரிப்பிலே தலைநிற்கிறார். தேவதாந்தர்யாமியாய் நின்றவிடம் ஆஜ்ஞாகைங்கர்யங்களுக்கு இலக்கு; *நல்லதோரருள் தன்னாலே காட்டினான் திருவரங்கமுய்பவர்க்குய்யும் வண்ணம்* என்கிறபடியே சேவலஸ்வக்ருபையாலே அத்யந்த ஸுலபனாய்க்கொண்டு அர்ச்சாவதாரமாய் நிற்கிறவிடம் அநுஜ்ஞாகைங்கர்யங்களுக்கு இலக்கு. *அடியோமுக்கேயெம்பெருமானல்லீரோ நீர்* என்று மண்டும்படியான அர்ச்சாவதாரத்திலே அவகாஹித்திருக்கும் ஸ்வாமிதேசிகன் அநுஜ்ஞாகைங்கர்ய நிஷ்டையையிறே பிரார்த்திக்கக் கடமைப்பட்டவர். விண்ணாட்டவர் மூதுவரான சேஷசேஷாசநகருடப்ரப்ருதிகளும் இத்தகைய கைங்கர்யங்களிலேயிறே அநவரதம் ஊன்றியிருப்பது.

இந்த ச்லோகத்தில் ஸ்வயம் பரிஷ்க்ரியேதா: என்றருளிச்செய்திருக்குமழகு வாசாமகோசரம். வகுத்த சேஷிவிஷயத்தில் சேஷபூதன் கைங்கர்யம் செய்வதனால் அத்தலைக்கு ஆனந்தமேயல்லது இத்தலைக்கு ஒன்றுமில்லை என்கிற ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தத்தைப் பெரிய முதலியார் ஸ்தோத்ரரத்நத்திலே "கதாஹமைகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி* என்றருளிச்செய்தார். அவ்விடத்தில் ஸ்வாமி தாம் விசதீகரித்தருளினவை ஸ்தோத்ரபாஷ்யத்திலே காணத்தக்கவை. அந்த விசேஷார்த்தமே இங்கு ஸ்வயம் பரிஷ்க்ரியேதா: என்பதிலே வெகு அழகாக அமைக்கப்பட்டது.

இங்கு மூன்றுவது பாதத்தில் ஸ்வயம் மாம் என்றே எங்கும் பாடம் காண்கிறது. அப்படியே முந்தின வியாக்கியானங்களும் காண்கின்றன. "பரிஷ்க்ரியேதா:- அலங்தர்வீதா:" என்றெழுதியுள்ளார் ஒரு பண்டிதர். 'இது கர்மணிரூபமேயன்றி கர்த்தரிரூபமன்று' என்பதை அனைவரும் எளிதில் அறிவார்கள். (த்வம் பரிஷ்க்ருதோ பவ) என்று பொருள்படுமேயல்லது, மாம் பரிஷ்குரு என்று பொருள்பட ப்ரஸக்தியேயில்லை. ஆனபின்பு மே என்றிருந்ததை மாம் என்று இடையிலே சிலர் மருண்டு திருத்திக் கொண்டார்களத்தனை. மாம் என்பது இங்குப் பொருந்துவதற்கு ஔசித்யமில்லை.

ஸ்வபதே என்றது 'தேவரீருடைய திருவடி விஷயமாக' என்றபடி. மே பரிசர்யாவிபவை:— மதீயை: கைங்கர்யை: என்றபடி.

அடியேனைத் தொண்டனாகக் கொண்டருளவேணுமென்று அடியேன் பிரார்த்திப்பது அடியேனுக்காகவன்று; இத்தால் நிறம் பெறுவது தேவரீர்தாமே—என்றுராயிற்று

{ விமலாசயவேங்கடேசஜந்மா ரமணீயா ரணபுங்கவப்ரஸாதாத்,
அநஸூயுபிராதரேண பாவ்யா பரமார்த்தஸ்துதிரந்வஹம் ப்ரபன்னை:. (10) }

(அந்) ரணபுங்கவப்ரஸாதாத் விமலாசயவேங்கடேசஜந்மா ரமணீயா பரமார்த்தஸ்துதி: அநஸூயுபி: ப்ரபந்நை: அந்வஹம் ஆதரேண பாவ்யா.

போரேற்றுப் பெருமாளுடைய அநுக்ரஹத்தினாலே விமலமதியான ஸ்ரீவேங்கடநாததேசிகன் பக்கலில் நின்றும் திருவவதரித்த பரமபோக்யமான இந்த பரமார்த்தஸ்துதியானது அஸூயையற்ற ப்ரபந்நர்களினால் நாடோறும் பேணியநுஸந்திக்கத் தக்கது.

இந்த ஸ்துதியில் முதல் ச்லோகமே பலச்ருதிபோல அவதரித்தமையால் இங்கே பலன் சொல்லித் தலைக்கட்டிற்றிலர்போலும். ... ... ... .... (10)

பெருமாள் கோயில் பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்

இயற்றிய

பரமார்த்தஸ்துதி வியாக்கியானம்

முற்றுப் பெற்றது.

———